கைபெய்தநீர் கடற்பரப்ப
வாமிருந்த வடைநல்கிச்
சோறுகொடுத்து மிகப்பெரிதும்
௫ வீறுசான..................நன்றுஞ்
சிறுவெள் ளென்பி னெடுவெண் களரின்
வாய்வன் காக்கை கூகையொடு கூடிப்
பகலுங் கூவு மகலு ளாங்கட்
காடுகண் மறைத்த கல்லென் சுற்றமொ
௨௦ டில்லென் றில்வயிற் பெயர மெல்ல
விடஞ்சிறி தொதுங்க லஞ்சி
யுடம்பொடுஞ் சென்மா ருயர்ந்தோர் நாட்டே.

திணை - பொதுவியல்; துறை - பெருங்காஞ்சி.

அவனைச் சிறுவெண்டேரையார்.

(௩௬௨) (௩௬௩.) இருங்கட லுடுத்தவிப் பெருங்கண் மாநில
முடையிலை நடுவணத் திடைபிறர்க் கின்றித்
தாமே யாண்ட வேமங் காவல
ரிடுதிரை மணலினும் பலரே சுடுபிணக்
௫ காடுபதி யாகப் போகித் தத்த
நாடு பிறர்கொளச் சென்றுமாய்ந் தனரே



அதனால், நீயுங் கேண்மதி யத்தை வியா
துடம்பொடு நின்ற வுயிரு மில்லை
மடங்க லுண்மை மாயமோ வன்றே

௧௦ கள்ளி வேய்ந்த முள்ளியம் புறங்காட்டு
வெள்ளில் போகிய வியலு ளாங்க

ஞுப்பிலாஅ வவிப்புழுக்கல்
கைக்கொண்டு பிறக்குநோக்கா
திழிபிறப்பினோ னீயப்பெற்று
௧௫ நிலங்கல னாக விலங்குபலி மிசையு
மின்னா வைகல் வாரா முன்னே
செய்ந்நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பக முழுதுடன் றுறந்தே.
திணையும் துறையும் அவை.
.....................ஐயாதிச் சிறுவெண்டேரையார்.
(௩௬௩) (௩௬௪.) வாடா மாலை பாடினி யணியப்
பாணன் சென்னிக் கேணி பூவா
வெரிமரு டாமரைப் பெருமலர் தயங்க
மைவிடை யிரும்போத்துச் செந்தீச் சேர்த்திக்
௫ காயங் கனிந்த கண்ணகன் கொழுங்குறை
நறவுண் செவ்வாய் நாத்திறம் பெயர்ப்ப
வுண்டுந் தின்று மிரப்போர்க் கீந்து
மகிழ்கம் வம்மோ மறப்போ ரோயே
யரிய வாகலு முரிய பெரும
௧0 நிலம்பக வீழ்ந்த வலங்கற் பல்வேர்
முதுமரப் பொத்திற் கதுமென வியம்புங்
கூகை கோழி யானாத்
தாழிய பெருங்கா டெய்திய ஞான்றே.
திணையும் துறையும் அவை.
அவனைக் கூகைக்கோழியார்.
(௩௬௪) (௩௬௫.) மயங்கிருங் கருவிய விசும்பு (க)முக னாக
வியங்கிய விருசுடர் கண்ணெனப் பெயரிய

(உ)வளியிடை வழங்கா வழக்கரு நீத்தம்
வயிரக் குறட்டின் (ந)வயங்குமணி யாத்துப்
ரு பொன்னந் திகிரி முன்சமத் துருட்டிப்
பொருநர்க் காணாச் செருமிகு முன்பின்
முன்னோர் செல்லவுஞ் செல்லா தின்னும்

## புறநானூறு மூலம்.

உஅரு

விலைநலப் பெண்டிரிற் பலர்மீக் கூற
(ச)வுள்ளேன் வாழியர் யானெனப் பன்மா
கo ணிலமக ளழுத காஞ்சியு
முண்டென வுரைப்பரா லுணர்ந்திசி னோரே.
திணையும் துறையும் அவை.
மார்க்கண்டேயனார்.

(நசுரு) க. முகனக. உ. வழியிடை. ந. வயிரமணியாரத்துப். ச. உளனேவாழிய. (நசுசு.) விழுக்கடிப் பறைந்த முழுக்குரன் முரச

...............ருங்கி னொருமொழித் தாக
வரவெறி யுருமி னுரறுபு சிலைப்ப
வொருதா மாகிய பெருமை யோருந்
ரு தம்புகழ் நிறீஇச் சென்றுமாய்ந் தனரே
அதனால், அறவோன் மகனே ம..........

உரைப்பக் கேண்மதி

நின்னூற்றம் பிறரறியாது
௧௦ பிறர்கூறிய மொழிதெரியா
ஞாயிற் றெல்லே யாள்வினைக் குதவி
யிரவி னெல்லே வருவது நாடி
யுழை.........................................
உழுவொழி பெரும்பக டழிதின் றுயகுச்
செங்கண் மகளிரொடு சிறுதுனி யளேஇ
யங்கட் டேற லாய்கலத் துகுப்பக்
கெடலருந் திருவ.........................
மடைவேண்டுநர்க் கிடையருகா
தலிழ்வேண்டுநர்க் கிடையருளி
௨௦ விடைவ்ழததுச குமகழுபப
நீர்கிலே பெருத்த வார்மண லடைகரைக்
காவுதோறும்...............................
மடக்க லுண்மை மாயமோ வன்றே.
திணையும் துறையும் அவை.
தருமபுத்திரனைக் கோதமனர்.
(௬௬௬) (௩௬௭.) நாகத் தன்ன பாகார் மண்டிலந்
தமவே யாயினுந் தம................
வேற்றோ ராயினு நோற்றோர்க் கொழியு
மேற்ற பார்ப்பார்க் கீர்ங்கை நிறையப்



இ பூவும் பொன்னும் புனல்படச் சொரிந்து
பாசிழை மகளிர் பொலங்கலத் தேந்திய
நாரரி தேறல்..........................மகிழ்ந்
திரவலர்க் கருங்கல மருகாது வீசி
வாழ்தல் வேண்டுமிவண் வரைந்த வைகல்

௧0 வாழச் செய்த நல்வினை யல்ல
தாழுங் காலைப் புணைபிறி தில்லை
யொன்றுபுரிந் தடங்கிய விருபிறப் பாளர்
முத்திப் புரையக் காண்டக விருந்த
கொற்ற வெண்குடைக் கொடித்தேர் வேந்தர்
௧௫ யானறி யளவையோ விதுவே வானத்து
வயங்கித் தோன்று மீனினு மிம்மென
வியங்கு மாமழை யுறையினு
முயர்ந்துமேந் தோன்றிப் பொலிகநுந் நாளே.

திணை - பாடாண்டிணை ; துறை - வாழ்த்தியல்.

சேரமான்மாவேண்கோவும், பாண்டியன் கானப்பேர்தந்த உக்கிரப்பெருவழுதியும், சோழன் இராசசூயம்வேட்ட பெருநற்கிள்ளியும் ஒருங்கிருந்தாரை ஔவையார்.

(௩௬௭)

(௩௬௮.) களிறு முகந்து பெயர்குவ மெனினே
யொளிறுமழை தவிர்க்குங் குன்றம் போலக்
கைம்மா வெல்லாங் கணையிடத் தொலைந்தன
.கொடிஞ்சி நெடுந்தேர் முகக்குவ மெனினே
௫ கடும்பரி நன்மான் வாங்குவயி னொல்கி
நெடும்பீ டழிந்து நிலஞ்சேர்ந் தனவே
கொய்சுவற் புரவி முகக்குவ மெனினே
மெய்நிறைந்த வடுவொடு பெரும்பிறி தாகி
வளிவழக் கறுத்த வங்கம் போலக்
௧0 குருதி யம்பெரும் புனல்கூர்ந் தனவே
யாங்க, முகவை யின்மையி னுகவை யின்றி
யிரப்போ ரிங்கு...னொ வியன்களத்

தாளழிப் படுத்த வாளே ருழவ
கடாஅ யானைக் கால்வழி யன்னவென்
கரு றெடாரித் தெண்கண் டெளிர்ப்ப வொற்றிப்
பாடி வந்த தெல்லாங் கோடியர்
முழவுமரு டிருமணி மிடைந்த
நிலாவுறு மார முகக்குவ மெனவே.

## புறநானூறு மூலம்.

உஅஎ

திணை - வாகை; துறை - மறக்களவழி.
சேரமான்குடக்கோநெடுஞ்சேரலாதன்
சோழன்வேற்பஃறடக்கைப்பெருநற் கிள்ளியோடு
போர்ப்புறத்துப்பொருதுவீழ்ந்தாரங்கழுத்தன்னதாக உயிர்போகாது
கிடந்தானைக் கழாத்தலையார்.
(ருகஅ) (ருசுகூ.) இருப்புமுகஞ் செறித்த வேந்தெழின் மருப்பிற்
கருங்கை யானை கொண்மூ வாக
நீண்மொழி மறவ ரெறிவன ருயர்த்த
வாண்மின் னாக வயங்குகடிப் படைந்த
ரு குருதிப் பலிய முரசுமுழக் காக
வரசராப் பனிக்கு மணங்குறு பொழுதின்
வெவ்விசைப் புரவி வீசுவளி யாக
விசைப்புறு வல்வில் வீங்குநா ணுகைத்த
கணைத்துளி பொழிந்த கண்ணகன் கிடக்கை
௧௦ யீரச் செறுவிற் றேரே ராக
விடியல் புக்கு நெடிய நீட்டிநின்
செருப்படை மிளிர்த்த திருத்துறு செஞ்சாற்

பிடித்தெறி வைவேற் கணையமொடு வித்தி
விழுத்தலை சாய்த்த வெருவரு பைங்கூழ்ப்
கரு பேய்மகள் பற்றிய பிணம்பிறங்கு பல்போர்க்
கணநரி யோடு கழுதுகளம் படுப்பப்
பூதங் காப்பப் பொலிகளந் தழீஇப்
பாடுநர்க் கிருந்த பீடுடை யாள
தேய்வை வெண்காழ் புரையும் விசிபிணி
உ0 வேய்வை காணா விருந்திற் போர்வை
யரிக்குரற் றடாரி யுருப்ப வொற்றிப்
பாடி வந்திசிற் பெரும பாடான்
றெழிலி தோயு மிமிழிசை யருவிப்
பொன்னுடை நெடுங்கோட் டிமயத் தன்ன
உரு வோடை நுதல வொல்குத லறியாத்
துடியடிக் குழவிப் பிடியிடை மிடைந்த
வேழ முகவை நல்குமதி
தாழா வீகைத் தகைவெய் யோயே.

திணையும் துறையும் அவை ; துறை - ஏர்க்கள உருவகமுமாம்.

சேரமான்கடலோட்டிய வேல்கெழுகுட்டுவனைப் பரணர்.

(கூகூக)

(கூஎ0.) ................................................ளி
நாரும் போழுஞ் செய்துண் டோராங்குப்



பசிதினத் திரங்கிய விரும்பே ரொக்கற்
கார்பதங் கண்ணென மாதிரந் துழைஇ
ரு வேருழந் துலறி மருங்குடு......கொழிய
வத்தக் குடிஞை துடிமரு டங்குர

லுழுஞ்சிலங் கவட்டிடை யிருந்த பருந்தின்
பெடைபயிர் குரலோ டிசைக்கு மாங்கட்
கழைகாய்க் துலறி.............................
௧௦ வரிமரற் றிரங்கிய கானம் பிற்படப்
பழுமர முள்ளிய பறவை போல
வொண்படை மாரி வீழ்கனி பெய்தெனத்
தூவைத்தெழு குருதி நிலமிசைப் பரப்ப
விளைந்த ......குர லரிந்துகால் குவித்து
௧௫ ...............பல்போர் பழிய வாங்கி
யெருதுகளி றாக வாண்மட லோச்சி
யதரி திரித்த வாளுகு கடாவி
னகன்கட் டடாரி தெளிர்ப்ப வொற்றி
வெந்திறல் வியன்களம் பொலிகென் றேத்தி
௨௦ யிருப்புமுகஞ் செறித்த வேந்தெழின் மருப்பின்
வரைமருண் முகவைக்கு வந்தனென் பெரும
வடிநவி லெஃகம் பாய்ந்தெனக் கிடந்த
தொடியுடைத் தடக்கை யோச்சி வெருவா
ரினத்தடி விராய வரிக்குட ரடைச்சி
௨௫ யழுகுரற் பேய்மக ளயரக் கழுகொடு
செஞ்செவி பெருவை திரிதரு
மஞ்சுவரு கிடக்கைய களங்கிழ வோயே.

திணையும் துறையும் அவை.

சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட்சென்னியை ஊன்பொதிபசுங் குடையார்.

(௩௭௦)

(௩௭௧.) அகன்றலை வையத்துப் புரவற் காணது

மரந்தலைச் சேர்ந்து பட்டினி வைகிப்
போதவி ழலரி நாரிற் றொடுத்துத்
தயங்கிரும் பித்தை பொலியச் சூடிப்
ரு பறையொடு தகைத்த கலப்பையென் முரவுவா
யாடுறு குழிசி பாடின்று தூக்கி
மன்ற வேம்பி னொண்பூ வுறைப்பக்
குறைசெயல் வேண்டா நசைய விருக்கையே

புறநானூறு மூலம்.

உ௮௬

னரிசி யின்மையி னாரிடை நீந்திக்
௧0 கூர்வா யிருமபடை நீரின் மிளிர்ப்ப
விருகணை ய......ளி யன்பின்று தலைஇ
யிரைசுரும் பார்க்கு முரைசால் பாசறை
வில்லே ருழவநின் னல்லிசை யுள்ளிக்
குறைத்தலைப் பிணனெதிர்ப்போர் பழித்தி
௧ரு யானை யெருத்தின் வாண்மட லோச்சி
யதரி திரித்த வாளுகு கடாவின்
மதியத் தன்னவென் விசியுறு தடாரி
யகன்க ணதிர வாகுளி தொடாவிற்
பணைமரு ணெடுந்தாட் பல்பிணர்த் தடக்கைப்
உ0 புகர்முக முகவைக்கு வந்திசிற் பெரும
களிற்றுக்கோட் டன்ன வாலெயி றழுத்தி
விழுக்கொடு விரைஇய வெண்ணிணச் சுவையினள்
குடர்த்தலை மாலை துயல்வரச் சூடி (யுணத்தின)
வாழுப் பெருவளஞ் செய்தோன வானத்து

உரு வயக்குபன் மீனினும் வாழியர் டலவென
வருகெழு பேஎய்மக ளயரக்
குருதித்துக ளாடிய களங்கிழ வோயே.

திணையும் துறையும் அவை.

தலையாலங்கானத்துச் செருவென்றநெடுஞ்செழியனைக் கல்லாடனார். (கஎக) (கஎ௨.) விசிபிணித் தடாரி விம்மென வொற்றி
யேத்தி வந்த தெல்லா முழுத்த
விலங்குவா ளவிரொளி வலம்பட மின்னிக்
கணைத்துளி பொழிந்த கண்கூடு பாசறைப்
ரு பொருந்தாத் தெவ்வ ரரிந்ததலை யடுப்பிற்
கூவிள விறகி னாக்குவரி நுடங்க
லானா மண்டை வன்னியந் துடுப்பி
னீரா வெண்மா னிடந்துழந் தட்ட
மாமறி பிண்டம் வாலுவ னேந்த
கo வதுவை விழவிற் புதுவோர்க் கெல்லாம்
வெவ்வாய்ப் பெய்த பூதநீர் சால்கெனப்
புலவுக்களம் பொலிய வேட்டோய்நின்
னிலவுத்திக ழார மூகக்குவ மெனவே.

திணை - வாகை; துறை - மறக்களவேள்வி.

அவனை மாங்குடிகிழார்.

(கஎ௨)



(கஎக.) உருமிசை முரச முழக்கென விசைப்பச்
செருநவில் வேழங் கொண்மூ வாகத்
தேர்மா வளிதுளி தலைஇ நாமுறக்

கணைக்காற் றெடுத்த கண்ணகன்

பாசறை

௫ யிழிதரு குருதியொ டேந்திய

வொள்வாட்

பிழிவது போலப் பிட்டையூ றுவப்ப

மைந்த ராடிய மயங்குபெருந் தானைக்

கொங்கு புறம்பெற்ற கொற்றவேந்தே

......................தண்ட மாப்பொறி

௧0 மடக்கண் மயிலியன் மறலி யாங்கு

நெடுஞ்சுவர் நல்லில் புலம்பக்

கடைசிழிந்து

மென்றோண் மகளிர் மன்றம பேணா

......................யணிப் புரவி வாழ்கெனச்

௫ சென்னிழ லினமையி னன்னிழற் சேர

நுண்பூண் மார்பிற் புன்றலைச் சிறாஅ

ரம்பழி பொழுதிற் றமர்முகங் காணா

..........................ற் றொகைகான

வேந்து புறங்கொடுத்த வீந்துகு பறந்தலை

௨0 மாட மயங்கெரி மண்டிக் கோடிறு

புருமெறி மலையி னிருநிலஞ் சேரச

சென்றோன் மன்ற சொ................

...........ண்ணறிநர் கண்டுகண் ணலைப்ப

வஞ்சி முற்றம் வயக்கள னாக

௨௫ வஞ்சா மறவ ராட்போர் பழித்துக்

கொண்டனை பெரும குடபுலத் ததரி

பொலிக வத்தைநின் பணைதனற......ளம்
விளங்குதிணை வேந்தர் களந்தொறுஞ்
சென்று
புகர்முக முகவை பொலிகென றேகுதிந் ௩௦
தொண்ட ரென்ப பெரியோர் யானு
மங்கண் மாக்கிணை யதிர வொற்ற
..............லெனுயினுங் காதலி னேத்தி
நின்னோர் பிறரிவ ணின்மையின்.......
மன்னெயின் முகவைக்கு வந்திசிற பெரும ௩
ரு பகைவர் புகழ்ந்த வாண்மை நகைவர்க்குத்
தாவின் றுதவும் பண்பிற் பேயொடு
புறநானூறு மூலம்.

உ௬௬

கணநரி திரிதரு மாங்க ணினனருந்து
செஞ்செவி யெருவை குழீஇ
யஞ்சுவரு கிடக்கைய களங்கிழ வோயே.

திணை - அது; துறை - மறக்களவழி; ஏர்க்கள உருவகமுமாம்.

சோழன் குராப்பள்ளித்துஞ்சிய கிள்ளிவளவன்
ஐூர்கிழார்.
கருவூரேறிந்தானைக் கோ

(௩௭௩)

(௩௭௪.) கானன் மேய்ந்து வியன்புலத் தல்கும்
புல்வா யிரலை நெற்றி யன்ன
பொலமிலங்கு சென்னிய பாறுமயி ரவியத்

தண்பனி யுறைக்கும் புலரா ஞாங்கர்
௫ மன்றப் பலவின் மால்வரை பொருந்தியென்
றெண்கண் மாக்கிணை தெளிர்ப்ப வொற்றி
யிருங்கலை யோர்ப்ப விசைஇக காண்வரக்
கருங்கோற் குறிஞ்சி யடுக்கம் பாடப்
புலிப்பற் றாலிப் புன்றலைச் சிறாஅர்
௧0 மான்கண் மகளிர்க் கான்றோ ரகனாுவா
சிலைப்பாற் பட்ட முளவுமான் கொழுங்குறை
விடர்முகை யடுக்கத்துச் சினைமுதிர் சாந்தம்
புகர்முக வேழத்து மருப்பொடு மூன்று
மிருங்கேழ் வயப்புலி வரியதட் குவைஇ
௧௫ விருந்திறை நல்கு நாட னெங்கோன்
கழறொடி யாஅ யண்டிரன் போல
வண்மையு முடைமையோ ஞாயிறு
கொன்விளங் குதியால் விசுட ௦ னே.

திணை - பாடாண்டிணை; துறை - பூவைநிலை.

ஆய் அண்டிரனை உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்.

(கஎச)

(கஎடு) அலங்குகதிர் சுமந்த கலங்கற் சூழி
நிலைதளர்வு தொலைந்த வொல்குநிலைப் பல்காற்
பொதியி லொருசிறை பள்ளி யாக
முழாஅரைப் போந்தை யரவாய் மாமட
௫ லொரும் போருங் கிணையொடு சுருங்கி
யேரின் வாழ்நர் குடிமுறை புகாஅ
வூழிரந் துண்ணு மூயவல் வாழ்வைப்
புரவெதிர்ந்து கொள்ளுஞ் சான்றோர் யாரெனப்
பிரசந் தாங்கு மறாஅ யாண

௧௦ ரவனா யணிப்படப்பை நன்னாட்டுப் பொருந
பொய்யா வீகைக் கழறொடி யாஅய்
யாவரு மின்மையிற் கிணைப்பத் தாவது
பெருமழை கடற்பரந் தாஅங்கி யானு
மொருநின் னுள்ளி வந்தனெ னதனாற்
௧௫ புலவர் புக்கி லாகி நிலவரை
நிலீய ரத்தை நீயே யொன்றே
நின்னின்று வறுவி தாகிய வுலகத்து
நிலவன் மாரோ புரவலர் துன்னிப்
பெரிய வோத்தினுஞ் சிறிய வுணராப்
௨௦ பீடின்று பெருகிய திருவிற்
பாடின் மன்னரைப் பாடன்மா ரெமரே.

திணை - பாடாண்டிணை ; துறை - வாழ்த்தியல்.
அவனை அவர்.

(௩௭௫)

(௩௭௬.) விசும்பு நீத்த மிறந்த ஞாயிற்றுப்
பசுங்கதிர் மழுகிய சிவந்துவாங் கந்திச்
சிறுநனி யிறந்த பின்றைச் செறிபிணிச்
சிதாஅர் வள்பினென் றடாரி தழீஇப்
௫ பாண ராரு மளவை யான்றன்
யாணர் நன்மனைக் கூட்டுமுத னின்றனெ
னிமைத்தோர் விழித்த மாத்திரை ஞெரேரெனக்
குணக்கெழு திங்கள் கனையிரு ளகற்ற

பண்டறி வாரா வுருவோ டென்னைத்
௧0 தொன்றுபடு துளையொடு பருவிழை போகி
நைந்துகரை பறைந்தவென் னுடையு நோக்கி
விருந்தின னளிய னிவனெனப் பெருந்தகை
(௧)நின்ற முரற்கை நீக்கி நன்று
மரவுவெகுண் டன்ன தேறலொடு சூடுறு
௧௫ நிரயத் தன்னவென் வறன்களைந் தன்றே
யிரவி னானே யீத்தோ னெந்தை
யன்றை ஞான்றினோ டின்றி னூங்கு
மிரப்பச் சிந்தியே னிரப்படு புணையி
னுளத்தி னளக்கு விரந்த கையே
௨0 னிறைக்குளப் புதவின் மகிழ்ந்தனெ னாகி
ஒருநாள், இரவலர் வனையா வள்ளியோர்
கடைத்தலை

## புறநானூறு மூலம்.

உ௬௯.

ஞாங்கர் நெடுமொழி பயிற்றித்
தோன்றல் செல்லாதென் சிறுகிணைக் குரலே.

திணை - அது; துறை - இயன்மொழி.
ஒய்மான்நல்லியாதனைப் புறத்திணைநன்னாகனார்.
(௯௬)

௧. நின்றமுரற்.

,(௩.௭௭.) ........................................
பொற்கோட்டி

யானையரியக்கவர்பரிக் (க)கச்சைநன்மான்
(உ)வடிமணிவாக்கு
சினைநற்றேர்க்குழுவின (ஙூ)கதழிசைவனதனிவுவா
ளினவாழ்
நாரர்வமொமனறிடநதடலொலிகொண்டகா
ணையடலயெங்
குருசினீமன்னியநெடிதே.

திணை - அது ; துறை - வாழ்த்தியல்.

சோழன் இராசசூயம் வேட்டபெருநற்கிள்ளியை
உலோச்சனார். (ஙஎஎ)

---

க. கச்சமை. உ. வடிமணியாங்குருள.
ஙூ. கதழ்பரி..............டண்டிக்கடலொலிகோசமா.

(ஙஎஅ.) தென்பரதவர் மிடல்சாய
வடவடுகர் வாளோட்டிய
தொடையமை கண்ணித் திருந்துவேற் றடக்கைக்
கடுமா கடைஇய விடுபரி வடிம்பி
ரு னற்றூர்க் கள்ளின் சோழன் கோயிற்
புதுப்பிறை யன்ன சுதைசெய் மாடத்துப்
பணிக்கயத் தன்ன நீணகர் நின்றே
னரிக்கூடு மாக்கிணை யிரிய வொற்றி
யெஞ்சா மரபின் வஞ்சி பாட
௧0 வெமக்கென வகுத்த வல்ல மிகப்பல
மேம்படு சிறப்பி னருங்கல வெறுக்கை
தாங்காது பொழிதந் தோனே யதுகண்
டிலம்பா டுழந்தவென் னிரும்பே ரொக்கல்

விரற்செறி மரபின செவித்தொடக் குநருஞ்
கரு செவித்தொடர் மரபின விரற்செறிக் குநரு
மரைக்கமை மரபின மிடற்றியாக் குநரு
மிடற்றமை மரபின வரைக்கியாக் குநருங்
கடுந்தே றிராம னுடன்புணர் சீதையை
வலித்தகை யரக்கன் வௌவிய ஞான்றை
உ0 நிலஞ்சேர் மதாணி கண்ட குரங்கின்

உ௬௪. புறநானூறு மூலம்.

செம்முகப் பெருங்கிளை யிழைப்பொலிந் தாஅங்
கறாஅ வருநகை யினிதுபெற் றிகுமே
யிருங்கிளைத் தலைமை யெய்தி
யரும்பட ரெவ்வ முழந்ததன் றலையே.

திணை - அது; துறை - இயன்மொழி.

சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட்சென்னியை ஊன்போதிபசுங் குடையார்.

(௬௪)

(௬௭௧.) யானே பெறுகவன் றாணிழல் வாழ்க்கை
யவனே பெறுகவென் னாவிசை நுவற
னெல்லரி தொழுவர் கூர்வாண் மழுங்கிற்
பின்னை மறத்தோ டரியக் கல்செத்
௫ தள்ளல் யாமைக் கூன்புறத் துரிஞ்சு
நெல்லமல் புறவி னிலங்கை கிழவோன்
வில்லி யாதன் கிணையேம் பெரும
குறுந்தா ளேற்றைக் கொழுங்க ணவ்விளர்
நறுநெய் யுருக்கி நாட்சொறி..............
௧0 வல்ல னெந்தை பசிதீர்த் தல்லெனக

கொன்வரல் வாழ்க்கைநின் கிணைவன் கூறக்
கேட்டதற் கொண்டும் வேட்கைதண் டாது
விட்டோய் தலைய குன்றம் பின்படர
.......................கனென் யானே தாயி
கரு றாவாக் குழவி போல வாங்கத்
திருவுடைத் திருமனை யைதுதோன்று கமழ்புகை
வருமழை மங்குலின் மறுகுடன் மறைக்குங்
குழும்ப.........டுநதொடகழி நீண்மதி லூரே.

திணை - அது; துறை - பரிசிற்றுறை.

ஏய் மான்வில்லியாதனைப் புறத்திணைநன்னுகனுர்.

(கூஎகு)

(கூஎ0.) தென்பவ வத்து முத்துப் பூண்டு
வடகுன்ற......................................
.......................................ங்கடற் றுனை
யின்னிசை விறல்வென்றித்
ரு தென்னவர் வயமறவன்
மிசைப்பெய்த நீர் கடற்பரந்து முத்தாகுந்து
நாறிதழ்க் குளவியொடு கூதளங் குழைய





வெறுபெ..........................................த்துந்து
தீஞ்சுளைப் பலவி னுஞ்சிற் பொருநன்
௧0 றுப்பெதிர்ந் தோர்க்கே யுள்ளாச் சேய்மைய
னட்பெதிர்ந் தோர்க்கே யங்கை நண்மையன்
வல்வேற் கந்த னல்லிசை யல்ல

......................த்தார்ப் பிள்ளையஞ் சிறுஅ
ரன்ன ளுகன் மாறே யிக்கில
கரு மிலம்படு காலை யாயினும்
புலம்பல்போ யின்று பூத்தவென் கடும்பே.

திணை - பாடாண்டிணை : துறை - இயன்மொழி.

நாஞ்சில்வள்ளுவனைக் கருவூர்க் கதப்பிள்ளை.

(௩௮௦) ௩அக ) ஊனுமூனு முனையி னினிதெனப்
பாலிற் பெய்தவும் பாகிற் கொண்டவும்
மளவுபு கலந்து மெல்லிது பருகி
விருந்துறத் தாற்றி யிருந்தனெ மாகச்
ரு சென்மோ பெருமவெம் விழவுடை நாட்டென
யாந்தன் னறியுந மாகத் தான்பெரி
தன்புடை மையி னெம்பிரி வஞ்சித்
துணரியது கொளாஅ வாகிப் பழமூழ்த்துப்
பயம்பகர் வறியா மயங்கரின் முதுபாழ்ப்
க0 பெயல்பெய் தன்ன செல்வத் தாங்க
ணியா மன்னர் புறங்கடைத் தோன்றிச்
சிதாஅர் வள்பிற் சிதர்ப்புறத் தடாரி
யூனுகிர் வலந்த தெண்க ணொற்றி
விரல்விசை தவிர்க்கு மரலைப் பாணியி
கரு னிலம்பா டகற்றல் யாவது புலம்பொடு
தெருமர லுயக்கமுந் (க)தீர்க்குவோ மதனு
லிரு(உ)நிலங் கூலம் பாறக் (௩)கோடை
வருமழை (ச)முழக்கிசைக் கோடிய பின்றைச்
சேயை யாயினு மிவணை யாயினு
உ0 மிதற்கொண் டறிநை வாழியோ கிணைவ

சிறுநனி, ஒருவழிப் படர்கென் றோனே யெந்தை
யொலிவெள் ளருவி வேங்கட நாட
னுறுவருஞ் சிறுவரு மூழ்மா றுய்க்கு
மறத்துறை யம்பியின் மானப் பிறப்பிறன்



உரு திருங்கோ ளீரப பூட்கைக்
கரும்ப னூரன் காதன் மகனே.

திணையும் துறையும் அவை.

கரும்பனூர்கிழானை நன்னாகனார்.

(௩௮௧)

---

க. நீர்க்குவோனதனுல். ௩. கொண்டவருமழை.

உ. நிலக்கடலம் ௪. முழக்கிடைக்.

(௩௮உ.) கடற்படை யடற்கொண்டி
மண்டுற்ற மறனேன்றுட்
டண்சோழ நாட்டுப்பொருந
னலங்குளை யணியிவுளி
ரு நலங்கிள்ளி நசைப்பொருநரேம்
பிறர்ப்பாடிப் பெறல்வேண்டே
மவற்பா டுதுமவன் றாள்வா ழியவென
நெய்குய்ய வூனவின்ற
பலசோற்று னின்சுவைய
௧0 நல்குரவினப்சிததனபவெனபகிள
முன்னாள் விட்ட மூதறி சிறுஅரும

யானுமே மணியக் கேழணி யுத்திக்
கட்கேள்விக் கவைநாவிற்

றாநிறத்த வராஅப்போல
கரு வறனொரீஇ வயங்குவாய்ப்ப
விடுமதி யத்தை கடுமான் றோன்ற
னினதே, முந்நீ ருடுத்தவிவ் வியனுல கறிய
வெனதே கிடைக்கா முன்னவென் றெண்கண்

மாக்கிணைக்

கண்ணகத் தியாத்த நுண்ணரிச் சிறுகோ
உ0 லெறிதொறு நுடங்கி யாங்குநின் பகைஞர்
கேட்டொறு நடுங்க வேத்து
வென்ற தோபிறர் வேத்தவை யானே.

திணை - அது; துறை - கடைநிலை.

சோழன் நலங்கிள்ளியைக் கோவூர்கிழார்.

(கூஅஉ)

(கூ௩௩.) ஓண்பொறிச் சேவ லெடுப்பவேற் றெழுந்து
தண்பணி யுறைக்கும் புலரா ஞாங்கர்
நுண்கோற் சிறுகிணை சிலம்ப வொற்றி
நெடுங்கடை நின்று பகடுபல வாழ்த்தித்
ரு தன்புக ழேத்தினெ னாகப் புலங் ........
புறநானூறு மூலம்.

உ௯௫

தருங்கடி வியனகர்க் குறுகல் வேண்டிக்
கூம்புவிடு மென்பிணி யவிழ்த்த வாம்பற்

றேம்பா யுள்ள தங்கமழ் மடருளப்
௧0 பாம்பு பயந்தன்ன வடிவின் (க)சாம்பின்
கழைபடு சொலியி னிழையணி வாரா
வொண்பூங் கலிங்க முடீஇ நுண்பூண்
வசிந்துவாங்கு நுசுப்பி னவ்வாங் குந்திக்
கறபுடை மடந்தை தற்புறம் புல்ல
௧௫ வெற்பெயர்ந்த நோக்கி......................
...................................கற்கொண்
(உ)டளித்துப் பிறந்தனெ னாகி யவ்வழிப்
பிறர், பாடுபுகழ் பாடிப் படர்பறி வேனே
குறுமுலைக் கலமரும் பாலார் வெண்மறி
௨0 நனைமுக வூகமொடு கஞ்சென...............
.................(௩)கன்றுபல கெழீஇய
கான்கெழு நாடன் கடுந்தேர் வியனென
வொருவனை யுடையேன் மன்னே யானே
யருனெவன் பரிகோ வெள்ளியது நிலையே.

திணையும் துறையும் அவை
மாறேக்கத்து *நப்பசலையார்.

(௩அ௩)

க. காம்பின. உ. டழிளிதரப. ௩. தனறுபல. (௩அ௪.) மென்பாலா னுடனணை இ
வஞ்சிக்கோட் டுறங்குநாரை
வாடைக்கரும்பின் பூவருந்து
வன்(க)பாலாற் கருங்கால்வரகின்
௫ ....................................
வங்கட் குறுமுயல் வெருவ வயல
கருங்கோட் டிருப்பைப் பூவுறைக குந்து
விழவின் றாயினு முழவர் மண்டை

பிருங்கெடிற்று மிசையொடு பூங்கள் வைகுந்து
௧௦ ...............துணையேம் பெரும
செல்லென்னும் பொன்னென்னுங்
கன்னற்கொண்ட நறவென்னு
............மன்னு வவைபலவும்

* நப்பாலையாரென்றும் பிரதிபேதமுண்டு.

௩௪ ௨௬௮ புறநானூறு மூலம்.

யான்றண்டவு (௨)மூன்றண்டா
௧௫ நிணம்பெருத்த கொழுஞ்.

நீர்நாண நெய்வழங்கிப்
புரந்தோ னெநதை யாமலநதொலே.........
யன்னோனே யுடையேமெனபவற.........
௨௦ கியாண்டு நிற்க வெள்ளி மாணட
வுண்டநன்கலம் பெய்துநடக்கவுந்
தின்றநண்ப (௩)லூன்றோண்டவும்
வந்த வைக லல்லது
சென்ற வெல்லைச் செலவறி யேனே.,

திணையும் துறையும் அவை.
கரும்பனூர்கிழானைப் புறத்திணைநன்னாகனார்.
(௩௮௪

———— ௧. பாலாற்கு. ௨. மதுன்றண்டா. ௩. லூன் றொனறணடவு.

(௩௮௫.) வெள்ளி தோன்றப் புள்ளுக்குர லியம்பப்
புலரி விடியற் பகடுபல வாழ்த்தித்

தனவடத தொன்றினு மிலனே பிறன்கடை
யகன்கட் டடார்ரிப் பாடுகேட் டருளி
ரு வறனியா னீங்கல் வேண்டி யென்னரை
நீலத்தின் சிதார்களைந்து
வெளிது டீஇயென் பசிகளைந் தோனே
காவிரி கிழையுந் தாழ்நீர்ப் படப்பை
நெல்விளை கழனி யம்பர் கிழவோ
கo னல்லரு வந்தை வாழியர் புல்லிய
வேங்கட விறல்வரைப் பட்ட
வோங்கல் வானத் துறையினும் பலவே.

திணை - அது; துறை - வாழ்த்தியல்.

அம்பர்கிழான் அருவந்தையைக் கல்லாடனார்.

(கூஅரு) (கூ.அசு.) நெடுநீர நிறைகயத்துப்
படுமாரித் துளிபோல
நெய்துள்ளிய வறைமுகக்கவுஞ்
சூடு கிழித்து வாடூன் மிசையவு
ரு முன்கொண்ட வெண்மண்டை
யான்பயத்தான் முற்றழிப்பவும்
வெய்துண்ட வியர்ப்பல்லது



செய்தொழிலான் வியர்ப்பறியாமை
யீத்தோ னெந்தை யிசைதன தாக
கo வயலே, நெல்லின் வேலி நீடிய கரும்பின்
பாத்திப் பன்மலர்ப் பூத்த தும்பின

புறவே, புல்லருந்து பல்லாயத்தான்
வில்லிருந்த வெங்குறும்பின்று
கடலேகரந்த கலனெண்ணுவோர்
கரு கானற் புன்னைச் சினைநிலைக் குருகு
கழியே, சிறுவெள் ளாம்பின் கொள்ளை சாற்றிப்
பெருங்கண்ணுட் டுமனெலிக்குந்து
அன்னநன் ளுட்டுப் பொருநன் யாமே
பொராஅப் பொருநரேம்
உ0 குணதிசை நின்று குடமுதற் செலினுங்
குடதிசை நின்று குணமுதற் செலினும்
வடதிசை நின்று தென்வயிற் செலினுந்
தென்றிசை நின்று குறுகாது நீடினும்
யாண்டு நிற்க வென்றியாம்
உரு வேண்டிய துணர்ந்தோன் றுள்வா ழியவே.

திணையும் துறையும் அவை.

சோழன்குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனைக் கோவூர்கிழார். (கூஅசு) (கூஎ.) வள்ளுகிர வயலாமை
வெள்ளக கெண்டனன வீங்குவிசிப்
புதுப்போர்வைத்
தெண்கண் மாக்கிணை யியக்கி யென்று
மாறுகொண்டோர் மதிலிடறி
ரு நீறுடிய நறுங்கவுள
பூம்பொறிப் பணையெருத்தின
வேறுவேறு பரந்தியங்கி
வேந்துடையிளை யயல்பரக்கு
மேந்துகோட் டிரும்பிணர்த்தடக்கைத்

௧0 திருந்துதொழிற் பலபகடு
பகைப்புல மன்னா பணிதிறை தந்துநின்
னசைப்பல வாழ்நர் நல்குர வகற்றி
மிகப்பொலியாதசெவடிகுயர்தகை
யெனறியானிசபபிணனினனறெனிற
௧௫ பலபிறன வாழ்த்த விருந்தோ ரென்கோ
மிருவினகாசனறிருந்துகழற்

௬௦௦ புறநானூறு மூலம்.

சேவடி குறுகல் வேண்டி
வென்றி ரக்கும் விறன்முரசினோ
னென்சிறுமையி னிழித்துநோக்கான்
௨0 றன்பெருமையிற் றகவுநோக்கிக்
குன்றகழ் களிறென்கோ
ொ..................ாவென்கோ
மன்றுநிறையு நிரையென்கோ
மனைக்களமரொடு களமென்கோ
௨௫ ஆங்கவை, கனவென மருள வல்லே நனவி னல்கி
யோனே நசைசா ரோன்ற

பூழியர்பெருமபியானைச்
செருமிகு நோன்றாட் செல்வக் கடுங்கோ
௩0 வாழி யாத னென்னுந் தெவ்வ
ருயர்குடை பணித்திவண் விடுவர் மாதோ
ரெடிதே, நி......வஞ்சிப் புறமதி லலைக்குங்
கல்லென் பொருநை மணலினு மாங்கட்

பல்லூர் சுற்றிய கழனி
கரு யெல்லாம் விளையு நெல்லினும் பலவே.
திணையும் துறையும் அவை.
சேரமான் சிக்கற்பள்ளித்துஞ்சிய
செல்வக்கடுங்கோவாழியாதனைக் குண்டுகட்பாலியாதன்.
(கூஅஎ)

(கூஅஅ.) வெள்ளி தென்புலத் துறைய விளைவயற்
பள்ளம் வாடிய பயனில் காலை
யிரும்பறைக் கிணைமகன் சென்றவன் பெரும்பெயர்
..............................பொருந்தித்
ரு தன்னிலை யறியுந ளாக வந்நிலை
யிடுக்க ணிரியல் போக வுடைய
கொடுத்தோ னெந்தை கொடைமேந் தோன்ற
லுமருப்பாக, வெல்லும் வாய்மொழிப் புல்லுடைவி
.........பெயர்க்கும்பணணாகடெடடொரமககிரென
கய விளைப்பக டேத்து மேனி நினைத்தொடர்
நாடொறும் பாடே னாயினே னாக
நாணு, மணிகிளர் முன்றிற் றென்னவன் மருகன்
பிணிமுரசிரங்கும் பீடுகெழு தானை



யண்ணல் யானை வழுதண
கரு மாறி வியரென் பெருங்கிளைப் புரவே.
திணை - அது; துறை - இயன்மொழி.
சிறுகுடிகிழான்பண்ணனை மதுரை அளக்கர்ஞாழார்மகனார்
மள்ளனார். (கூஅஅ) (கூஅகூ.) நீர் நுங்கின் கண்வலிப்பக்
கானவேம்பின் காய்திரங்கக்

கயங்களியுங் கோடையாயினு
மேலா வெண்பொன் போகுறு காலை
ரு யெம்மூ ருள்ளுமோ பிள்ளையம் பொருந
வென்றீத் தனனே யிசைசா னெடுந்தகை
யின்றுசென் றெய்தும் வழியது மல்லன்
செலினே காணு வழியது மல்லன்
புன்றலை மடப்பிடி யினையக் கன்றுதந்து
க0 குன்றக நல்லூர் மன்றத்துப் பிணிக்குங்
கல்லிழி யருவி வேங்கடங் கிழவோன்
செல்வுழி யெழாஅ நல்வேர் முதிய
ருத னுங்கன் போல நீயும்
பசித்த வொக்கற் பழங்கண் வீட
கரு வீறுசா னன்கல நல்குமதி பெரும
வைதக லல்குன் மகளிர்
நெய்தல்கே ளன்மார் நெடுங்கடை யானே.

திணையும் துறையும் அவை.

ஆதனுங்கனைக் கள்ளிலாத்திரையனார்.

(ரு-அகூ)

(ருகூ0.) அறவை நெஞ்சத் தாயர் வளரு
மறவை நெஞ்சத் தாயி வாள
ரரும்பலர் செருந்திநெடுங் கான்மலர் கமழு
மன்னமுற்றத், தார்வலர் குறுகி னல்லது காவலர்
ரு கனவினுங் குறுகாக் கடியுடை வியனகர்
மலைக்கணத் தன்ன மாடஞ் சிலம்பவென்
னரிக்குரற் றடாரி யிரிய வொற்றிப்
பாடி நின்ற பன்னா ளன்றியுஞ்

சென்ற ஞான்றைச் சென்றுபட லிரவின்
௧௦ வந்ததற் கொண்டு நெடுங்கடை நின்ற
புன்றலைப் பொருந னளியன் றானெனத்
தன்னுறைக் குறுகல் வேண்டி யென்னரை

௩௰௨. புறநானூறு மூலம்.

முதுநீர்ப் பாசி யன்ன வுடைகளைந்
ததிரும வானன்ன புதுமடிக் கொளீஇ
௧௫ மகிழ்தரன் மரபின் மட்டே யன்றியு
மமிர்தன மரபி னூன்றுவை யடிசில்
வெள்ளி வெண்கலத் தூட்ட லன்றி
முன்னூர்ப் பொதியிற் சேர்ந்த மென்னடை
யிரும்பே ரொக்கல் பெரும்புலம் பகற்றக்
௨௦ கடுங்கண் வேங்கை வீகண் டன்ன
படுதரு செந்நெற் போரொடு நல்கிக்
கொண்டி பெறுகென் றோனே யுண்டுறை
மலையல ரணியுந் தலைநீர் நாடன்
கண்டாற் கொண்டுமனை திருந்தடி வாழ்த்தி
௨௫ வரனறி யலவென் பாடுபசி போக்க
லண்ணல் யானை வேந்த
ருண்மையோ வறியல காண்பறி யலரே.

திணையும் துறையும் அவை.

அதியமானெடுமானஞ்சியை ஔவையார்.

(௩௯௦)

(௩௧௧.) தண்டுளி பலபொழிந் தெழிலி யிசைக்கும்
விண்டு வனைய விண்டோய் பிறங்கல்

முகடுற வுயர்ந்த நெல்லின் கிழ்வரப்
பகடுதரு பெருவளம் வாழ்த்திப் பெற்றதிருந்தா
ரு மூரிபாந்துபட கெண்டி யரிய லார
கெ............ய லார்தைய ரூண்டினி துவக்கும்
வேங்கட வரைப்பின் வடபுலம் பசித்தென
வீங்குவர் திறுத்தவெ னிரும்பே சொக்கல்
தீர்கை விடுக்கும் பண்பின் முதுகுடி
கo கன.........................................
வினவலின் முன்னும் வந்தோன் மருங்கி
லின்னுமன் னுகலிற் பொருந னிவனென
நின்னுணர்ந் தறியுந ரென்னுணர்ந்து கூறக்
காண்கு வந்திசி.................................
கரு ...........பெருக்கழி றுழைமீ னருந்துந்
துதைந்த தூவியும் புதாஞ் சேக்குந்
தந்தை, தந்தபுன யானின செழுநகர் வரைப்பி
னெஞ்சமர் காத லின்வெய் யோளொ
டின்றுயி...............................ஞ்சா

புறநானூறு மூலம்.

ரூ0ரூ.

உ0 முனிபத னறிந்து பொழிய
வேலி யாயிரம் விளைகவின் வயலே.

- அது ; துறை - கடைநி

பொறையாற்றுகிழானைக் கல்லாடனர்.

(ருகக) (ருகூஉ.) மதியேர் வெண்குடை யதியர் கோமான்

கொடும்பூ ணெழினி நெடுங்கடை நின்றியான்
பசலை நிலவின் பனிபடு விடியற்
பொருகளிற் றடிவழி யன்ன வென்கை
ரு யொருகண் மாக்கிணை யொற்றுபு கொடாஅ
வுருகெழு மன்ன ராரெயில் கடந்து
நிணம்படு குருதிப் பெரும்பாட் டீரத்
தணங்குடை மரபி னிருங்களந் தோறும்
வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டி
௧௦ வெள்ளை வரகுங் கொள்ளும் வித்தும்
வைக லுழவ வாழிய பெரிதெனச்
சென்றியா னின்றனெ னாக வன்றே
யூருண் கேணிப் பகட்டிலைப் பாசி
வேர்புரை சிதாஅர் நீக்கி நேர்கரை
௧௫ நுண்ணூற் கலிங்க முடீஇ யுண்ணெனத்
தேட்கடுப் பன்ன நாட்படு தேறல்
கோண்மீ னன்ன பொலங்கலத் தளைஇ
யூண்முறை யீத்த லன்றியுங் கோண்முறை
விருந்திறை நல்கி யோனே யந்தரத்
௨௦ தரும்பெற லமிழ்த மன்ன
கரும்பிவட் டந்தோன் பெரும்பிறங் கடையே.

திணையும் துறையும் அவை.

அதியமான்மகன் பொதுட்டெழினியை ஒளவையார்.

(௩௯௨) (௩.௯௩.) பதிமுதற் பழகாப் பழங்கண் வாழ்க்கைக்
குறுநெடுந் துணையொடு கூமை வீதலிற்
குடிமுறை பாடி யொய்யென வருந்தி

யடனசை மறந்தவெங் குழிசி மலர்க்குங்
ரு கடனறி யாளர் பிறகாட் டின்மையின்
வள்ளன் மையினெம் வரைவோர் யாரென
வுள்ளிய வுள்ளமொ டுலகசை துணையக
கவக மெல்லா மொருபாற் பட்டென



மலர்தா ரண்ணணி னல்லிசை யுள்ளி
க0 யீர்ங்கை மறந்தவெ னிரும்பே ரொக்கல்
கூர்ந்த வெவ்வம்விடக் கொழுநிணங் கிழிப்பக்
கோடைப் பருத்தி வீடுநிறை பெய்த
மூடைப் பண்ட மிடைநிறைந் தன்ன
வெண்ணிண மூரி யருள நாளுற
கரு வீன்ற வரவி னாருக் கடுக்குமென்
றொன்றுபடு சிதாஅர் துவர நீக்கிப்
போதுவிரி பகன்றைப் புதுமல ரன்ன
வகன்றுமடி கலிங்க முடீஇச செல்வமுந்
தேடின்று நல்குமதி பெரும மாசின்
உ0 மதிபுரை மாக்கிணை தெளிர்ப்ப வொற்றி
யாடுமக ளல்கு லொப்ப வாடிக்
கோடை யாயினுங் கோடி..................
காவிரி புரக்கு நன்னாட்டுப் பொருந
வாய்வாள் வளவன் வாழ்கெனப்
உரு பீடுகெழு நோனருள் பாடுகம் பலவே.

திணையும் துறையும் அவை.

சோழன் குளமுற்றத்துத்துஞ்சியகிள்ளிவளவனை நல்லிறையனார்.

(௬௯௩)

(௬௪௯.) சிலைபுலா நிமிர்ந்த சாந்துபடு மார்பி
னொலிபுனற் கழனி வெண்குடைக் கிழவோன்
வலிதுஞ்சு தடக்கை வாய்வாட் குட்டுவன்
வள்ளிய னாதல் வையகம் புகழினு
௫ முள்ள லோமபுமி னுயர்மொழிப் புலவீர
யானும், இருணிலாக் கழிந்த பகல்செய் வைகறை
யொருகண் மாக்கிணை தெளிர்ப்ப வொற்றிப்
பாடிமிழ் முரசி னியறேர்த் தந்தை
வாடா வஞ்சி பாடினே னாக
௧௦ வகமலி யுவகையொ டணுகல் வேண்டிக்
கொன்றுசினந் தணியாப் புலவுநாறு மருப்பின்
வெஞ்சின வேழ நல்கின னஞ்சி
யானது பெயர்த்தனெ னாகத் தானது
சிறிதென வுணர்ந்தமை நாணிப் பிறிதுமோர்
௧௫ பெருங்களிறு நல்கி யோனே யதற்கொண்
டிரும்பே ரொக்கல் பெரும்புலம் புறினுந்

புறநானூறு மூலம். ௩௯௪

துன்னருங் பரிசி றருமென
வென்றுஞ் செல்லேனவன் குன்றுகெழு நாட்டே.

திணையும் துறையும் அவை.

கடைநிலையாயின வெல்லாம் பாடாண்டிணை.

சோழியவேனாதித்திருக்குட்டுவனைக் கோனாட்டு
குமரனார்.

(கூகூரு.) வயலுழவர் வன்புலத்துப்
பகடுவிட்டுக் குறுமுயலின்
குழைச்சூட்டொடு நெடுவாளைப்
பல்லுவியற் பழஞ்சோற்றுப்
ரு புகவருந்திப் புதற்றளவின்
பூச்சூடி.............................
.........................அரியலாருந்து
மனைக்கோழிப் பைம்பயிரின்னே
கானற்கோழிக் கவர்குரலொடு
கo நீர்க்கோழிக் கூப்பெயர்க்குந்து
வேயன்ன மென்றோளார்
மயிலன்ன மென்சாயலார்
கிளிகடியின்னே
யகலள்ளற் புள்ளிரீஇயுந்து
கரு யாகைப், பலநல்ல புலனணியுஞ்
சீர்சான்ற விழுச்சிறப்பிற

# எறிச்சலூர் மாடலன் மதுரைக்

(கூகை)

சிறுகண் யானைப் பெறலருந் தித்தன்
செ......................உறந்தைக்குணாது
நெடுங்கை வேண்மா னருங்கடிப் பிடவூர்
ரு0 றபபெயாச் சாத்தன் கிளையேம் பெரும
முன்னு ணண்பகற் சுரனுழந்து வருந்திக்
கதிர்ஞி செ..............................மாலைத்
தன்கடைத் தோன்றி யென்னுற விசைத்தலிற்

றீங்குரல்..........ளரிக்குரற் றடாரியொ
உடு டாகுசின்ற வெற்கண்டு
சிறிதுநில்லான் பெரிதுங்கூறு
னருங்கலம் வரவேயருளினன் வேண்டி
யெனவுரைத் தன்றி நல்கித் தன்மனைப்
பொன்போன் மடந்தையைக் காட்டி யிவளை
௩௦ யென்போற் போற்றென் றோனே யதற்கண்

## ௩௦௬ புறநானூறு மூலம்.

டவன்மறவலேனே பிறருள்ளலேனே
யகன்ஞாலம் பெரிதுவெம்பினு
மிகவானு ளெரிதோன்றினுங்
குளமீனொடுந் தாட்புனையினும்
௩டு பெருஞ்செய் நெல்லின் கொக்குகிர் நிமிரல்
பசுங்கட் கருனைச் சூட்டொடு மாந்தி
விளைவெனறு வெள்ளங்கொள்கென
வுள்ளது மில்லது மறியா
தாங்கமைந் தன்றால் வாழ்கவன் றளே.

திணையும் துறையும் அவை.

சோழநாட்டுப் பிடவூர்கிழார்மகன் பெருஞ்சாத்தனை
மதுரைநக்கீரர். (கஙரு) (கககூ.) கீழ்நீரான் மீன்வழங்குந்து
மீநீராற் கண்ணன்ன மலர்பூக்குந்து
கழிசுற்றிய விளைகழனி
யரிப்பறையாற் புள்ளோப்புந்
ரு துண்டுநீர்கூறு மணற்றண்கான்

மென்பறையாற் புள்ளிரியுந்து
நனைக்கள்ளின் மனைக்கோசர்
தீந்தேற லறவுமகிழ்ந்து
தீங்குரலவக கொலைத்தூங்குந்து
௧௦ வுள்ளிலோர்க்கு வலியாகுவன்
கேளிலோர்க்குச கேளாகுவன்
கழுமியவேளே
வளநீர் வாட்டாற் றெழினி யாதன்
கிணையேம்பெரும, கொழுந்தடிய சூடென்கோ
௧௫ வளநனையின் மட்டென்கோ
குறுமுயலி னிணம்பெய்தந்
துறுநெய்ய சோறென்கோ
திறந்துமறந்த கூட்டுமுதன்
முகந்துகொள்ளு முணவென்கோ
௨௦ அனையவைபலபல......................
....................................ருந,தய
விரும்பேமரக்க லிருஞ்செஞ்சிய
வழித்துவப்ப வித்தோனொக்கை
யெம்மோரக்கக் கங்குண்டே
௨௫ மாரிவானத்து மீனுப்பண்

## புறநானூறு மூலம்.

௩0ஆ

விரிகதிர வெண்டிங்களின்
விளங்கித் தோன்றுகவவன் கலங்கா நல்லிசை
யாமும் பிறரும் வாழ்த்த நாளும்
நிலைசா னன்கல னல்கி

கூ0 புறநானூறு மூலமும் உரையும்.

திணையும் துறையும் அவை.

வாட்டாற்றெழினியாதனை மாங்குடிகிழார்.

(கூகசு)

(கூகள.) வெள்ளியு மிருவிசும் பேர்தரும் புள்ளு
முயர்சினைக் குடம்பைக் குரற்றோற் றினவே
பொய்கையும் போதுகண் விழித்தன பைப்பயச்
சுடருஞ் சுருங்கின் றொளியே பாடெழுந்

ரு திரங்குகுரன் முரசமொடு வலம்புரி யார்ப்ப
விரவுப் புறங்கண்ட காலைத் தோன்றி
யெஃகிரு ளகற்று மேமப் பாசறை
வைகறை யரவங் கேளியர் பலகோட்
செய்தார் மார்ப வெழுமதி துயிலெனத்

க0 தெண்கண் மாக்கிணை தெளிர்ப்ப வொற்றி
நெடுங்கடைத் தோன்றி யோனே யதுநயந்
துள்ளி வந்த பரிசில னிவனென
நெய்யுறப் பொரித்த குய்யுடை நெடுஞ்சூடு
மணிக்கல னிறைந்த மணநாறு தேறல்

கரு பாம்புரித் தன்ன வான்பூங் கலிங்கமொடு
மாரி யன்ன வண்மையிற் சொரிந்து
வேனி லன்னவென் வெப்பு நீங்க
வருங்கல நல்கி யோனே யென்றுஞ்
செறுவிம் பூத்த சேயிதழ்த் தாமரை

உ0 யறுதொழி லந்தணர் றம்புரிந் தெடுத்த
தீயொடு விளங்கு நாடன் வாய்வாள்
வலம்படு தீவிற் பொலம்பூண் வளவ

னெறிதிரைப் பெருங்கட லிறுதிக்கட் செலினுந்
தெறுகதிர்க் கனலி தென்றிசைத் தோன்றினும்
உரு மென்னென் றஞ்சலம் யாமே வென்வே
லருஞ்சமங் கடக்கு மாறறல்வன்
றிருந்துகழ ஞோன்றாட் டண்ணிழ லேமே.

திணை - பாடாண்டிணை; துறை - பரிசில்விடை; கடைநிலைவிடை.
சோழன் குளமுற்றத்துத்துஞ்சியகிள்ளிவள்வனை எருக்காட்டூர்த்தாயங்கண்ணனார். (கசஎ)



(கசஅ.) மதிநிலாக் காப்ப வெள்ளி யேர்தர
வகைமா ணல்கிற.....................
பொறிமயிர் வாரணம் பொழுதறிந் தியம்பப்
பொய்கைப் பூமுகை மலரப் பாணர்
ரு கைவல் சீறியாழ் கடனறிந் தியக்க
விரவுப் பூறம்பெற்ற வேம வைகறைப்
பரிசிலர் விசையெ.........................
வரிசையி னிறுத்த வாய்மொழி வஞ்ச
னசைவர் குறுகி னல்லது பகைவர்க்குப்
க0 புலியின மடிந்த கல்லளை போலத்
துன்னல் போகிய பெரும்பெயர் மூதூர்
மதியத் தன்ன வென்.........றுருடாரி
யிரவுறை தெவ்வா ரிப்ப வட்டிக்
துள்ளி வருநர் கொள்கல நிறைப்போய்
கரு தள்ளா நிலையை யாகிய ரெமக்கென
வென்லா வரீஇய சிறிதிற்குப் பெரிதுவந்து

விரும்பிய மூகத்த னாகி யென்னைத்
துரும்புபடு சிதாஅர் நீக்கித் தன்னைப்
புகைவிரிந் தன்ன பொங்கு துகிலுடீஇ
௨௦ யழல்கான் றன்ன வரும்பெறன் மண்டை
நிழல்காண் டேறல் நிறைய வாக்கி
யானுண வருள லன்றியுந் தானுன்
மண்டைய கண்ட மான்வறைக் கருனைக்
கொக்குகிர் நிமிர லொக்க லார
௨௫ வரையுறழ் மார்பின் வையகம் விளக்கும்
விரவுமணி யொளிர்வரு மரூஉறழ் பூரமொ!
புரையோன் மேனிப் பூத்தசல..................
முரைசெலவருளியோனே
......................யருவிப் பாயற் கோவே.

திணை - அது ; துறை - கடைநிலை.

சேரமான்வஞ்சனைத் திருத்தாமனார்.

(௩௯௯)

(௩௯௯.) அடுமகண் முகந்த வளவா வெண்ணெற்
றொடுமோ னுலக்கைப் பருஉக்குற் றரிசி

காடி வெள்ளுலைக் கொளீஇ நீழ
லோங்குசினை மாவின் றீங்கனி நறும்புளி
௫ மோட்டிரு வராஅற் கோட்டுமீன் கொழுங்குறை

செறுவின் வள்ளை சிறுகொடிப் பாகற்
பாதிரி யூழ்முகை யவிழ்விடுத் தன்ன
மெய்களைந் தினனொடு விரைஇ .........
மூழ்ப்பப் பெய்த முழுவலிழ்ப் புழுக்கல்
கO .........,களற் படுகள் களியட வைகிற்
பழஞ்சோ றயிரு மூழங்குநீர்ப் படப்பைக்
காவிரிக் கிழவன் மாயா நல்லிசைக்
கிள்ளி வளவ னுள்ளி யவற்படர்ந்துஞ்
செல்லேன் செல்லேன் பிறர்முக னோக்கேன்
கரு நெடுங்கழைத் தூண்டி லிடுமீ னொடுத்துக்
கிணைமக ளட்ட பாஅற் புளிங்கூழ்
பொழுதுமறுத் துண்ணு முண்டியே னழிவுகொண்
டொருசிறை யிருந்தே னென்னே யினியே
யறவ ரறவன் மறவர் மறவன்
உO மள்ளர் மள்ளன் றொல்லோர் மருக
னிசையிற் கொண்டா னசையமு துண்கென
மீப்படர்ந் திறந்து வன்கோன் மண்ணி
வள்பரிந்து கிடந்த ........... மணக்க
விசிப்புறத் தமைந்த புதுக்காழ்ப் போர்வை
உரு யலகின் மாலை யார்ப்ப வட்டித்துக்
கடியு முணவென்னக் கடவுட்குந் தொடேன்
கடுந்தேர்ப் பள்ளற் கசாவா நோன்சுவற்
பகடே யத்தையான் வேண்டிவந் ததுவென
வொன்றியான் பெட்டா வளவை யன்றே

௩0 வான்று விட்டனை னத்தை விசும்பின்
மீன்பூத் தன்ன வுருவப் பன்னிரை
யூர்தியொடு நல்கி யோனே சீர்கொள
விழுமென விழிதரு மருவி
வான்றோ யுயர்சிமையத் தோன்றிக் கோவே.

திணை - அது; துறை - பரிசில்விடை.
தாமான்தோன்றிக்கோனை ஐயூர்முடவனார்.

(௩௯௯) (௪00.) மாகவிசும்பின் வெண்டிங்கள்
மூவைந்தான் முறைமுற்றக்
கட்டன்வெட் கண்டன்னவெள்
ளியமிசையா மரபேத்திக்



௫ கடைத்தோன்றிய கடைக்கங்குலாற்
பலர்துஞ்சவுந் தான்றுஞ்சா
துலகுகாக்கு முயர்செ...............
கேட்டோ னெந்தையென் றெண்கிணைக் குரலே
கேட்டதற் கொண்டும் வேட்கைதண் டாது
௧0 தொன்றுபடு சிதா ரருங்கு நீக்கி
மிகப்பெருஞ் சிறப்பின் வீறு............
.......................................லவனை
கலிங்க மழித்தசோட் டொன்னார் நோக்கி
நாரரித்த கறவுமகிழ்ந்து
௧௫ யோதறியேன் பதிப்பழகவுங்
தன்பகை கடித லன்றியுஞ் சேர்ந்தோர்

பசிப்பகை கடிதலும் வல்லன் மாதோ
மறவர் மலிந்தத ..........................
கேள்வி மலிந்த வேள்வித் தூணத்
௨0 திருக்கழி யிழிதரு ............ கலிவங்கந்
தெறுநீர்ப் பரப்பின் யாறற சித்தத்
துறைதொறும் பிணிக்கு நல்லூ
ருறைவின் யாண..........கிழவோனே.

திணை - பாடாண்டிணை; துறை - இயன்மொழி.
சோழன் நலங்கிள்ளியைக் கோவூர்கிழார்.
(௪00)

புறநானூறு முற்றிற்று.

௨

# பாட்டு முதற்குறிப்பகராதி.

[பின்வரும் எண்கள் பாட்டைக் குறிப்பன.]

## பாட்டு.

அகன்றலைவை,
அஞ்சுவருமரபின்,
அடலருந்து,
அடிபுனைதொடு,
அடுநையாயினும்,
அடுமகண்முகந்த,
அணங்குடைநெடு,
அணங்குடையவுணர்,
அணித்தழை,
அத்தநண்ணிய,

அதளெறிந்தன்ன,

அந்தோவெந்தை,

அமர்ப்பேணியு,

அரசுதலைவரி,

அரிமயிர்த்தி,

அருப்பம்பேணா,

அருவிதாழ்ந்த,

அருவியார்க்கும்,

அருளாயாகலோ,

அலங்குகதிர்,

அலர்பூந்தும்பை,

அழல்புரந்தவடர்,
அழலவிர்வயங்கி,
அளிதோதானேபாரி,
அளிதோதானேபேரிருங்,
அளியதாமே,
அற்றைத்திங்கள்,
அறவைநெஞ்சத்,
அறுகுளத்துகுத்து,
அறையும்பொறையும்,
அன்னச்சேவலன்ன,
அன்னவாகலின்,

# பாட்டு.

இன்றுசெலினுந்,
இனிநினைந்திரங்கு,
ஈண்டுநின்றோர்க்குந்,
ஈயெனவிரத்த,
ஈரச்செவ்வி,
ஈன்றுபுறந்தரு,
உடம்புரித்தன்ன,

உடையனாயி,

உடைவளை கடிப்ட,

உண்டாலம்ப,

உண்போன்றூறு,

உருகெழுஞாயிற்றோண்,

உருமிசைமுரச,

உவவுமதியுருவி,

உள்ளாற்றுக்கவலை,

உற்றுழியுதவியும்,

ஊர்க்குறுமாக்கள்,

ஊர்நண்ணியிறந்த,

ஊர்முதுவேலி,

ஊனுமூனுமிசை,
எஃகுளங்கழி,
ஏங்கோனிருந்து,
எந்தைவாழி,
எமக்கேகலங்க,
எருதுகாலுறு,
எருதேயிளைய,

ஏருடையன்ன,
எழுவினிநெஞ்ச,
எறிபுனக்குறவன்,
என்றிறத்தவலங்,
என்னைக்கூரிஃது,

# பாட்டு.

## களிறுமுகந்து,

கறங்குமிசையருவிய,
கறங்குவெள்ளருவி,
கன்முழையருவி,
கன்றமராயங்,
காய்நெல்லறுத்து,
கார்ப்பெயறலைஇய,
காரெதிருருமி,
கால்பார்கோத்து,
காலுறுங்காலம்,
கானக்காக்கை,
கானன்மேய்ந்து,

கானுறைவாழககை,

கிண்கிணிகளைந்த,

கீழ்நீரான்,

குய்குரன்மலிந்த,

குயில்வாயன்ன,

குழவியிறப்பினு,

குறத்திமாட்டிய,

குறியிறைக்குரம்பை,

குன்றுதலைமணந்,

குன்றுமலையும்,
கூதிர்ப்பருந்தி,
கெடுகசிந்தை,
கேட்டன்மாத்திரை,
கையதுகடனிறை,
கையதுவேலே,
கொடுங்குழை,
கொடுவரிவழங்கு,
கொண்டைக்கூழை,
கொய்யடகுவாட,
கோட்டங்கண்ணி,

கோதைமார்பிற்,
சாறுதலைக்கொண்டென,
சிலையுலாநிமிர்ந்த,

சிறப்பில்சிதடு,
சிறப்புடைமாபிற்,
சிறுஅர்துடி,
பியகட்பெறினே,

# பாட்டு.

நறுவிரை துறந்த,

நன்றாய்ந்தநீணிமிர்,

நனிபேதையே,

நாகத்தன்ன,

நாட்கள்ளுண்டு,

நாடனென்கோ,

நாடாகொன்றோ,

நாளன்றுபோகி,

நிரப்பாதுகொடுக்கும்,

நிலம்பிறக்கிடுவது,

நிலமிசைவாழ்நர்,
நிறபபுடகொ,
நின்னயந்துறைநர்க்,
நினைக்குங்காலை,
நீடுவாழ்கென்றி,

நீண்டொலியழுவம்,
நீயே, அமர்காணின்,
நீயே, தண்புனற்காவிரி,
நீயே, பிறரோம்புற்ற,
நீயே, புறவினல்லல்,

நீர்தூங்கின்,

நீர்மிகிற்சிறையு,

நீரறவறியா,

நீருட்பட்ட,

நீலக்கச்சை,

நுங்கோயாரென,

நுதிவேல்கொண்டு,

நும்படைசெல்லுங்,

நெடுநீரநிறை,

நெல்லரியுமிருந்,

நெல்லுமுயிரன்றே,

நோகோயானே,

படுமணிமருங்,
படைப்புப்பலபடைத்து,
பண்டும்பண்டும்,
பதிமுதற்பழகா,
பயங்கெழுமாமழை,
பாலுடைமருங்,
பருத்திப்பெண்டின்,
பருத்திவேலிச்,

| எண். | பாட்டு. | எண். |
|---|---|---|

## பாட்டு முதற்குறிப்பகராதி.

| பாட்டு. | எண். |
|---|---|
| மதிநிலாக்கரப்ப, | ௩கூஅ |

வெளிறிஞேன்காழ், உ௯
வேட்டவேந்தனும், ௯௯௬

## பாட்டு முதற்குறிப்பகராதி.

| பாட்டு எண். | பாட்டு. | எண். | பாட்டு. |
|---|---|---|---|
| ௧௫௨ | வேந்தர்க்கேந்தி, | உ௬௨ | வேழம்வீழ்த்த, |
| அ | ாணை, | ௯௯0 | வையங்காவலர், |
| | , | உ௬௯ | |

முதலில்லாதபாட்டுக்கள் :—

உளள, ௯௧ள, ௯உஉ, ௯உஅ, ௯௯௪, ௯௪௧, ௯௪௬, ௯ள0, ௯ளள.

முற்றுமில்லாதபாட்டுக்கள் :—

உ௬ள, உ௬அ.

சிலபாட்டுக்களின் பிற்பாகமும் சிலபாட்டுக்களின் இடைப்பாகமும் பிரதிகளிற் கிடைக்கவில்லை.

## திணைதுறைவிளக்கங்களின் முகவுரை.

புறநானூற்றில் ஒவ்வொருசெய்யுட்களின் ஒழுக்கத்தைப்புலப் படுத்தி அவ்வச்செய்யுட்களின்பின்

எழுதப்பட்டுள்ள திணையும் துறையும் தொல்காப்பியப்புறத்திணையியலிற்கூறிய இலக்கணத்தோடு சிறுபான்மை ஒத்திருப்பினும் பெரும்பாலும் ஒவ்வாமையாலும், இவை புறப்பொருட் பன்னிரு ப டலத்தின்படியே அமைக்கப்பட்டுள்ளனவெனத்தோற்றினும் இப்பொழுது அந்நூல் அகப்படாமையின் அதிலிருந்தெடுத்து யாதொன்றும் எழுதக்கூடாமையாலும், அந்நூலின்வழித்தாகிய புறப்பொருள் வெண்பாமாலையின் கருத்திற்கு இவை பெரும்பாலும் ஒத்திருக்கின்றமை யாலும் இத்திணைவிளக்கமும் பின்னுள்ள துறைவிளக்கமும் புறப்பொருள் வெண்பாமாலையின்படியே எழுத ப்பட்டன. சில அந்நூலிற்காணப்படா மையால், அவற்றிற்கு விளக்கம் எழுதப்படவில்லை. அந்நூலின்படி பார்க்குமிடத்தும் புறநானூற்றில் ஒருதிணைக்குரியதுறை மற்றொருதிணை யிலும் ஒருதுறைக்குரியதிணை மற்றொன்றிலுமாக மாறிக் கையெழுத்துப் பிரதிகளிலேயே எழுதப்பட்டுள்ளன. ஆனாலும் மேற்கோள் னன தென்று உண்மைவிளங்காமையால் அவற்றைத்திருத்தவில்லை.

## திணை விளக்கம்.

கரந்தை — *உருக௲, உ௲௦,

௨௬௧, ௨௬௩, ௨௬௪, ௨௬௫, ௨௭௦,
௨௮௭, ௨௯௦, ௨௯௧, ௨௯௮. கரந்
தைத்திணையாவது - பகைவர் கைப்
பற்றிய பசுக்கூட்டங்களை மீட்டல்;
'மலைத்தெழுந்தோர் மறஞ்சாயத்-தலை
க்கொண்ட நிரைபெயர்த்தன்று.'—
புறப்பொருள் வெண்பாமாலை, கரந்
தைப்படலம், ௧.

காஞ்சித்திணை:— ௭௧, ௭௨, ௭௩,
௧௦௯, ௧௧௦, ௧௧௧, ௨௮௧, ௨௯௩,
௩௩௬, ௩௩௭, ௩௩௮. காஞ்சித்திணை
யாவது - பகையரசன் போர்க்குவந்

துவிட, ஓரரசன் காஞ்சிப்பூவைச்சூ டித் தன்னிடத்தைப் பாதுகாத்தல்; 'வெஞ்சின வேந்தன் விடுதர வேந்தன் - காஞ்சி சூடிக் கடிமனை கருதின்று.' — புறப்பொருள் வெண்பாமாலை, காஞ்சிப்படலம், ௧.

**கைக்கிளைத்திணை** :— ௮௩, ௮௪, ௮௫.

கைக்கிளைத்திணையாவது - ஒருதலைக் காமம்; அஃது ஆண்பாற்கூற்றுக்கைக்கிளை பெண்பாற்கூற்றுக்கைக்கிளை என இருவகைப்படும்.

**தும்பைத்திணை** :— ௬௨, ௬௩, ௮௦, ௮௭, ௮௮, ௮௯, ௯௦, ௨௭௩, ௨௭௪, ௨௭௫, ௨௭௬, ௨௭௭, ௨௭௮, ௨௮௩, ௨௮௪, ௨௮௬, ௨௮௮, ௨௯௪, ௨௯௫, ௩௦௦, ௩௦௧, ௩௦௨, ௩௦௩, ௩௦௪, ௩௦௭, ௩௦௯, ௩௧௦, ௩௧௧. தும்பைத்திணை

*இவ்வெண்களும் பின்னுள்ள எண்களும் புறநானூற்றுச்செய்யுட்குரிய எண்களெனக்கொள்க.

உரை விளக்கம்.

யாவது - பகைவரோடு போர்செய் தலைநினைந்து தும்பைப்பூவைச்சூடுத ல்; 'செங்களத்து மறங்கருதிப் - பை ந்தும்பை தலைமலைந்தன்று.' — புறப் பொருள் வெண்பாமாலை, தும்பைப் படலம், க.

நொச்சித்திணை :—உஎக,உஎஉ,உகூகூ.
நொச்சித்திணையாவது - மதிலைக்காக் கும் வீரர்கள்சூடிய போர்ப்பூவைப்

புகழ்வது ; 'ஏப்புழை ஞாயி லேந்து
நிலை யரணங் - காப்போர் சூடிய பூப்
புகழ்ந் தன்று.'—புறப்பொருள்வெண்
பாமாலை, நொச்சிப்படலம், ௧.

பாடாண்டிணை:—௧, ௨, ௩, ௫, ௬, ௮, ௯, ௧௦, ௧௧, ௧௨, ௧௩, ௧௪, ௧௫, ௩௦, ௩௨, ௩௪, ௩௫, ௩௮, ௩௯, ௪௦, ௪௮, ௪௯, ௫௦, ௫௫, ௫௬, ௫௮, ௫௯, ௬௦, ௬௪, ௬௭, ௬௮, ௬௯, ௭௦, ௯௧, ௯௨, ௯௫, ௯௬, ௯௭, ௧௦௧, ௧௦௨, ௧௦௩, ௧௦௫, ௧௦௬, ௧௦௭, ௧௦௮, ௧௨௨, ௧௨௩, ௧௨௪, ௧௨௬, ௧௨௭, ௧௨௮, ௧௨௯, ௧௩௦, ௧௩௧, ௧௩௨, ௧௩௩, ௧௩௪, ௧௩௫, ௧௩௬, ௧௩௭, ௧௩௮, ௧௩௯, ௧௪௦, ௧௪௧, ௧௪௨, ௧௪௮, ௧௪௯, ௧௫௦, ௧௫௧, ௧௫௨, ௧௫௩, ௧௫௪, ௧௫௫, ௧௫௬, ௧௫௭, ௧௫௮, ௧௫௯, ௧௬௦, ௧௬௧, ௧௬௨, ௧௬௩, ௧௬௪, ௧௬௫, ௧௬௮, ௧௬௯, ௧௭௧,

கஎஉ, கஎங, கஎரு, கஎசா, கஎஎ, ககூசா, ககூஎ, ககூஅ, ககூகூ, உ00, உ0க, உ0உ, உ0ங, உ0ச, உ0ரு, உ0சா, உ0எ, உ0அ, உ0கூ, உக0, உகக, உகஉ, உகரு, உகசா, உசாசா, ஙசாஎ, ஙஎச, ஙஎரு, ஙஎசா, ஙஎஎ, ஙஎஅ, ஙஎகூ, ஙஅ0, ஙஅக, ஙஅஉ, ஙஅங, ஙஅச, ஙஅரு, ஙஅசா, ஙஅஎ, ஙஅஅ, ஙஅகூ, ஙகூ0, ஙகூக, ஙகூஉ, ஙகூங. பாடாண்டிணையாவது - ஒருவனுடையகீர்த்தியும் வலியும் கொடையும் அளியும் ஆகிய இவற்றைத் தெரிந்துசொல்லுதல்; 'ஒளியு மாற்றலு மோம்பா வீகையு - மளியு மென்றிவை யாய்ந்துரைத் தன்று.'—புறப்பொருள்வெண்பாமாலை, பாடாண்டிணைப்படலம், க.

—கசங, கசச, கசரு, கசசா, கசஎ. பெருந்திணையாவது -

**பொருந்தாக்காமம்.**

பொதுவியல் :—௧௮, ௨௪, ௨௭, ௨௮, ௨௯, ௬௫, ௭௪, ௭௫, ௧௧௨, ௧௧௩, ௧௧௪, ௧௧௫, ௧௧௬, ௧௧௭, ௧௧௮, ௧௧௯, ௧௨௦, ௧௨௧, ௧௮௨, ௧௮௩, ௧௮௪, ௧௮௫, ௧௮௬, ௧௮௭, ௧௮௮, ௧௮௯, ௧௯௦, ௧௯௧, ௧௯௨, ௧௯௩, ௧௯௪, ௧௯௫, ௨௧௪, ௨௧௭, ௨௧௮, ௨௧௯, ௨௨௦, ௨௨௧, ௨௨௨, ௨௨௩, ௨௨௪, ௨௨௫, ௨௨௬, ௨௨௭, ௨௨௮, ௨௨௯, ௨௩௦, ௨௩௧, ௨௩௨, ௨௩௩, ௨௩௪, ௨௩௫, ௨௩௬, ௨௩௭, ௨௩௮, ௨௩௯, ௨௪௦, ௨௪௧, ௨௪௨, ௨௪௩, ௨௫௩, ௨௫௪, ௨௫௫, ௨௫௬, ௨௮௦, ௩௬௨, ௩௬௩, ௩௬௪, ௩௬௫, ௩௬௬.

', ௭, ௧௬, ௩௬, ௪௧, ௪௬, ௪௭, ௫௭, ௯௮, ௨௧௩,

உகூஉ. வஞ்சித்திணையாவது - அரசன் வஞ்சிப்பூவைத்தலையிலேசூடிப் பகைவருடையபூமியைக் கைக்கொள்ளக்கருதுதல; 'வாடா வஞ்சி தலைமலைந்து - கூடார்மண் கொளக்குறித்தன்று.' — புறப்பொருள்வெண்பாமாலை, வஞ்சிப்படலம், க.

வாகைத்திணை :—கஎ, ககூ, உ0, உக, உஉ, உங, உரு, உசா, ஙக, ஙங, ஙஎ, சஉ, சங, சச, ருக, ருஉ, ருங, ருச, சாக, சாசா, எசா, எஎ, எஅ, எகூ, அக, அஉ, அசா, கூங, கூச, கூஅ, கூகூ, க00, க0ச, கஉரு, கசாசா, கசாஎ, கஎ0, கஎச, கஎஅ, கஎகூ, கஅ0, கஅக, உஎகூ, உஅரு, உகூசா, ங0ரு, ங0சா, ங0அ, ஙகஉ, ஙகங, ஙகச, ஙகரு, ஙகசா, ஙகஎ, ஙகஅ, ஙககூ, ஙஉ0, ஙஉக, ஙஉஉ, ஙசாஅ, ஙசாகூ, ஙஎ0, ஙஎக, ஙஎஉ, ஙஎங. வாகைத்திணை

யாவது - வாகைப்பூவைத்தலையிலே சூடிப் பகைவரைக்கொன்று ஆரவாரித்தல்; 'இலைபுனை வாகை சூடி யிகன் மலைந் - தலைகடற் றானை யரசட்டார்த் தன்று.'—புறப்பொருள்வெண்பாமாலை, வாகைப்படலம், க.

வெட்சித்திணை: — உருள, உருஅ, உசுஉ, உசுகூ, உகூஎ. வெட்சித்திணையாவது - வீரர், அரசனுடையகட்டளையைப்பெற்றேனும் பெருமலேனும்போய்ப் பகைவருடைய பசுக்களைக்கவர்தல்; 'வெஃறி வேந்தன் பணிப்பவும் பணிப்பின்றியுஞ் - சென்

துறைவிளக்கம்.

கூ

றி கன்முனை யாத்தந் தன்று.'—புறப்பொருள்வெணபாமாலை, வெட்சிப்படலம், க.

புறப்பொருள் வெண்பா ஞேரு மறிய வெடுத்துரைத் தன்று.'—
மாலே, வாகைப்படலம், ௩.
வெணபாமாலே, பா
டாண்படலம், ௯ .
ஆனந்தப்பை
குலமகள் தன் கண
வன்மரிக்கத் துன்பமுறுதல்; 'விழும
ங்கூர வேய்த்தோளரிவை - கொழு
நன்வீயக் குழைந்தயங்கின்று'—புற

புறப்பொருள்
ஆனந்தப்பையுள் :— உ௨அ, உ௩௧,
இவ்விலககண ம் உ௪௯, உ௪எ, உ௮௦.
புறநானூற்றுள் ௧உ - ம் செய்யுளுக் குளாவது - ஒரு
குப் பொருந்தவில்லே. பின்னும் இப்
படியே பலவுள.
உடனிலே :—௫அ.
உண்டாட்டு :—௨௫எ,

உ௫அ, உ௯உ,
ப்பொருள் வெண்பாமாலே, சிறப்பிற் உ௯௧, உ௧௪.
உண்டாட்டாவதுபொதுவியற்படலம், ௧௩, வீரர்
மதுவையுண்டு மனங்களித்தல்; இயன்மொழி :—அ, ௧, ௧௦, ௧௪, ௧௫,
'தொட்டிமிழுங் கழன்மறவர் - மட் ௧எ, உஉ, ௩௦, ௩௨, ௩௪, ௩அ,
௩௧, டுண்டு மகிழ்தூங்கின்று.'—புறப்பொ ௪௧, ௫௦, ௬எ, ௯௨,
௯௯, ௯எ, ௧௦௨, ருள் வெணபாமாலே, வெட்சிப்பட

௧௦௯, ௧௦எ, ௧௦அ, ௧உஉ, ௧உ௩,
௧உ௪, ௧உஅ, ௧உ௯, ௧௩௦, ௧௩௧,
௧௩உ, ௧௩௪, ௧௩எ, ௧௪உ, ௧௪௯,
௧௫௦, ௧௫௧, ௧௫௩, ௧௫௯, ௧௫எ,
௧௬அ, ௧எ௧, ௧எ௨, ௧எ௩, ௧எ௫,
௧எ௯, ௧எஎ, உ௧௨, உ௧௫, உ௧௯,
௩எ௯, ௩எஅ, ௩அ௦, ௩அ௧, ௩அஅ,
௩அ௯, ௩௯௦. இயன்மொழியாவது
- 'தலேவனெதிர் சென்றேறி அவன்

செய்தியையும் அவன் குலத்தோர் செய்தியையும் அவன்மேலே ஏற்றிப் புகழ்தல்' என்பர் நச்சினார்க்கினியர்; இதனைத் தொல்காப்பியம் புறத்திணை யியலில், ௬௫-ம் சூத்திரவுரையிற் காண்க. இயன்மொழியே இயன்மொ லம், ௧௫.

உவகைக்கலுழ்ச்சி: — ௨௭௭, ௨௭௮, ௨௧௫. உவகைக் கலுழ்ச்சியாவது - வாட்புண்மிகுந்த உடம்பையுடைய கணவனைக்கண்டு மனைவிமகிழ்ந்து க ண்ணீர்வீழ்த்தல்; 'வாள்வாய்த்த வடு வாழ்யாக்கைக் - கேள்கண்டு கலுழ்ந் துவந்தன்று'—புறப்பொருள் வெண் பாமாலை, தும்பைப்படலம், ௨௫.

எருமை மறம்: — ௮௦, ௨௭௪, ௨௭௫. எருமை மறமாவது - முதுகிட்ட தன்

சேனைக்குப்பின் பகைவர் சேனை
யையஞ்சாது மிகுந்த கோபங்கொ
ண்டு நிற்றல்; 'வெயர்பொடிப்பச் சி
னங்கடை இப் - பெயர் படைக்குப்பி



ன்னின்றன்று.'—புறப்பொருள் வெ
ண்பாமாலை, தும்பைப்படலம், ௧௫.
ஏர்க்களவுருவகம் :—௫௪௧, ௫௭௫.
ஏறண்முல்லை :—௮௬, ௨௧௬. ஏறுண்
முல்லையாவது-எதிரில்லாதபடி ஆண்
மைத்தன்மை மேன்மேல் ஏறுகின்ற
குடியொழுக்கத்தினை உயர்த்திச்சொ
ல்லுதல்; 'மாறின்றி மனங்கனலு -

புறப்பொருள்வெண்பாமாலை, வாகை
ப்படலம், ௨௨.
கடவுள்வாழ்த்து : — ௧. கடவுள்வாழ்த்

தாவது - அயன்முதலிய மும்மூர்த்தி களுள் ஒருவனை உயர்த்திச்சொல்லு தல்; 'காவல் கணணிய கழலோன்

கைதொழு - மூவரி லொருவனை யெ டுத்துரைத் தன்று.' — புறப்பொருள் வெண்பாமாலை, பாடாண்படலம, ௬ கடைநிலை :— ௧௨௭, ௬௮௨, ௬௮௬, ௬௮௪, ௬௯௧, ௬௯௨, ௬௯௬, ௬௯௪.

குடிநிலையுரைத்தல் :—௨௯0. குடிநிலை யுரைத்தலாவது - பழமையிலும் வீர த்திலும் புகழ்பெற்ற குடியின்வரலா ற்றைச்சொல்லுதல்; 'மண்டிணி ஞா லத்துத் தொன்மையு மறனுங் - கொ ண்டு பிறரறியுங் குடிவர வுரைத்தன் று.' — புறப்பொருள்வெண்பாமாலை, கரந்தைப்படலம், ௧௪.

குடைமங்கலம் :— ௬0. குடைமங்கல மாவது - அரசன்குடையைப்புகழ்ந்து

சொல்லுதல்; 'நாற்றிசையும் புகழ் பெருக - வீற்றிருந்தான் கூடபுகழ்ந் தன்று.'— புறப்பொருள்வெணபாமா லை, பாடாணபடலம், ௩௪.

குதிரைமறம்: — ௨௭௩, ௨௯௯, ௩0௨, ௩0௩, ௩0௪. குதிரைமறமாவது - ஒரு வீரனுடைய குதிரையின்மறத்தைக கூறுதல்; 'எறிபடையா னிகலமருட்-செறிபடைமான்றிறங்கிளந்தன்று.'— புறப்பொருள் வெண்பாமாலை, தும் பைப்படலம், ௭.

குறுங்கலி:—௧௫௩, ௧௫௪, ௧௫௫, ௧௫௬, ௧௫௭. குறுங்கலியாவது - வேறுமக ளிரைவிரும்பிய ஒருவனுடைய காத ல்கெடும்படி சொல்லுதல; 'நாறிருங் கூந்தன் மகளிரை நயப்ப - வேறுபடு வேட்கை வீயக் கூறின்று' — புறப் பொருள்வெண்பாமாலை,இருபாற்பெ ருந்திணை, ௧௮.

கையறுநிலை :—சுரு, ககஉ, ககங, ககச, கசுரு, ககசு, ககஎ, ககஅ, ககக, கஉ0, உகஎ, உகஅ, உகக, உஉ0, உஉக, உஉஉ, உஉங, உஉச, உஉரு, உஉசு, உஉஎ, உங0, உஙக, உஙஉ, உஙங, உஙச, உஙரு, உஙசு, உஙஎ, உஙஅ, உஙக, உச0, உசக, உசஉ, உசங, உசு0, உசுக, உசுங, உசுச, உசுரு, உஎ0. கையறுநிலையாவது - அரசனிறப்ப அவனைச்சேர்ந்தோர் அவ்விறந்துபாட்டைச்சொல்லி ஒழுக்கந்தளர்தல்; 'செய்கழன்மன்னன் மாய்ந்தெனச்சேர்ந்தோர் - கையற வுரைத்துக் கைசோர்ந் தன்று.' — புறப்பொருள் வெண்பாமாலை, சிறப்பிற்பொதுவியற்படலம், கச.

கொற்றவள்ளை: — ச, எ, சக, கஅ. கொற்றவள்ளையாவது - அரசனுடைய கீர்த்தியைச்சொல்லி அவன் பகைவர்

தேசங்கெடுதற்கு வருந்துதல்; 'மன்னவன் புகழ்கிளந் - தொன்னார்நா டழிபிரங்கின்று.' — புறப்பொருள்வெண்பாமாலை, வஞ்சிப்படலம், அ.

செருமலைதல்: — உ௫௧. செருமலைதலாவது - வெட்சியாரைக்கிட்டி அவர் அஞ்சத்தாக்கி மிக்க போர்செய்தலை மேற்கொள்ளுதல்; [வெட்சியார்-பசுக்களைக்கவர்ந்தோர்] 'வெட்சியாரைக் கண்ணுற்றுவளைஇ - யுட்குவரத்தாக்கியுளர்செருப்புரிந்தன்று.' — புறப்பொருள் வெண்பாமாலை, கரந்தைப்படலம், ௬.

செருவிடைவீழ்தல்: — உ௭௩, உ௭௨. செருவிடைவீழ்தலாவது - அகழியையும் காவற்காட்டையுங்காத்து இறந்த வீரருடைய வெற்றியைச்சொல்லுதல்; 'ஆழ்ந்துபடுகிடங்கி னருமிளைகா

த்து - வீழ்ந்தவேலோர் விறன்மிகுத் தன்று.'— புறப்பொருள்வெண்பாமாலை, நொச்சிப்படலம், ௪.

செவியறிவுறூஉ :—உ, ௯, ௫, ௬, ௯௫, ௪௦, ௫௫. செவியறிவுறூஉவாவது - மாற்சரியமும் கெடுதலுமில்லாத பெரிய எண்ணத்தை அரசனுக்குச்சொல்லுதல்; 'மறந்திரிவில்லா மன்பெருஞ்சூழ்ச்சி - யறந்தெரிகோலாற் கறியவுரைத்தன்று.'— புறப்பொருள்வெண்பாமாலை, பாடாண்படலம், ௯௯.

துறைவிளக்கம்.

— உ௬உ. தலைத்தோ

ற்றமாவது - ஒருவீரன் பகைவர்பசுக்களைக் கைக்கொண்டுவருதலறிந்து உறவுமுறையார்மனமகிழ்தல்; 'உரவெய்யோ னினந்தழீஇ-வரவுணர்ந்து கிளைமகிழ்ந்தன்று.'— புறப்பொருள்வெண்பாமாலை, வெட்சிப்படலம், ௧௨.

தாபதநிலை :— ௧௪௫, ௨௪௮, ௨௪௯, ௨௫௦, ௨௫௧, ௨௫௨. தாபதநிலையாவது - கணவனிறப்ப மனைவி வைதவ்யமடைந்ததைச்சொல்லுதல்; 'குருந்தலர்க்கண்ணிக் கொழுந ...மாய்ந்தெனக் - கருந்தடங்கண்ணாள் கைம்மைகூறின்று.'— புறப்பொருள்வெண்பாமாலை, சிறப்பிற்பொதுவியற்படலம், ௪.

தானைநிலை :—௨௭௯. தானைநிலையாவது-இரண்டுசேனையும் தனது வீரத்தைக் கொண்டாடும்படி ஒருவீரன் போர்க்

களத்திற்சிறப்பெய்திநிற்றல்; 'இரு படையு மறம்பழிச்சப் - பொருகளத் துப்பொலிவெய்தின்று.' — புறப்பொருள் வெண்பாமாலை, தும்பைப்படலம், உஉ.

தானைமறம் :—அஎ, அஅ, அகூ, கூ0, கஎ0, உகூச, ௱00, ௱0க. தானைமறமாவது-போர்செய்தற்கெதிர்ந்த இருவகைச்சேனைகளும் தம்முட்பொருது மடியாதவண்ணம ஒருவீரன் பாதுகாத்த ஆற்றலினது உயர்ச்சியைச்சொல்லுதல்; 'தாம்படைத் தலைக்கொள்ளாமை - யோம்படுத்த வுயர்வுகூறின்று.' — புறப்பொருள்வெண்பாமாலை, தும்பைப்படலம், ௱. இஃது இன்னும் இரண்டுவகைப்படும் : ச, ரு.

துணைவஞ்சி :—௱கசு, சரு, சசு, சஎ, ருஎ, உக௱.

தொகைநிலை :—சுஉ, சு௱. 'தொகை

நிலையாவது - போர்க்களத்திலே எல்லாரும் ஒருங்குமாய்ந்ததைச்சொல்லுதல்; 'அழிவின்றுபுகழ்நிறீஇ - யொழிவின்றுகளத்தொழிந்தன்று.'—புறப்பொருள்வெண்பாமாலை, தும்பைப்பட

டலம், உஅ.

நல்லிசைவஞ்சி:—உ௬. நல்லிசைவஞ்சியாவது - பகைவருடைய இடங்கள் கெடும்படி சென்றுவிட்டவீரனுடை

யவெற்றியைச்சொல்லுதல்; 'ஒன்றார் முனைகெடவிறுத்த - வென்வேலாடவன் விறன்மிகுத்த ன்று.'—புறப்

பொருள்வெண்பாமாலை, வஞ்சிப்பட

லம், உரு.
நீண்மொழி : — உஅஎ.
நூழிலாட்டு : — ௱0க, ௱௪0. நூழிலாட்டாவது - ஒரு வீரன் பகைவருடையசேனை கெடும்படி தன் மார்பைத்திறந்த வேலைப்பறித்து எறிதல் ; 'களங்கெழுமிய படையிரிய - வுளங்கழிந்த வேலெடுத்தோச்சின்று.'—புறப்பொருள் வெண்பாமாலை, தும்பைப்படலம், கரு.
நெடுமொழி : — உகூஅ. நெடுமொழியாவது - சிறந்த அரசனுக்கு ஒரு வீரன் தன்னுடைய மேம்பாட்டைத் தான் உயர்த்திச்சொல்லுதல் ; 'மன்மேம்பட்ட மதிக்குடையோற்குத் - தன்மேம்பாடு தானெடுத்துரைத்தன்று.'—புறப்பொருள் வெண்பாமாலை, கரந்தைப்படலம், கக.
பரிசில் கடாநிலை : — கக, க0க, க௱௫,

௧௩௯, ௧௫௮, ௧௫௯, ௧௬0, ௧௬௨, ௧௭௯, ௧௯௬, ௧௯௭, ௧௯௮, ௧௯௯, ௨0௯, ௨௧0, ௨௧௧, ௨௬௬. பரிசில் கடாநிலையாவது - 'பரிசிலரை நீங்கு தலைமையாது நெடிதுகொண்டொழுகிய தலைவனுக்குப் பரிசில் வேட்டோன் தன் கடும்பினது இடும்பையுந் தலியனகூறித் தான் குறித்த பொருண்மையினைச் செலுத்திக் கடாவினநிலை' என்பர் நச்சினார்க்கினியர்; இதனைத் தொல்காப்பியம், புறத்திணையியல். ௩௫-ம் சூத்திரவுரையிற்காண்க.

பரிசில்விடை:— ௧௪0, ௧௫௨, ௧௬௨, ௧௬[illegible]. பரிசில்விடையாவது - அர[illegible] புகழைக்கூறினோர்க்குப் பரிசில்வழங்கி இன்பமிகும்படி அவர்களுக்கு விடைகொடுத்தல்; '[illegible]ந்தனுண் மகிழ வெல்புகழறைந்தோர்க்- கீந்து பரிசி லின்புற விடுத்தன்று.' —

புறப்பொருள்வெண்பாமாலை, பாடாண்படலம், உசு.

பரிசிற்றுறை :— கஉசு, கருரு, கருஎ, கசஅ, கருச, கசுக, கசுரு, கசுஅ, உ00, உ0க, உ0உ, உ0ரு, உ0ச, உ0ரு, உ0சு, உ0எ, உ0அ, ருஎசு.

பரிசிற்றுறையாவது - அரசன்முன்னே பரிசிலர் தாம் கருதியபேறு இதுவெனச் சொல்லுதல்; 'மண்ணகங் காவன் மன்னன் முன்னொ - ரெண்





பரிசி லிதுவென வுரைத்தன்று.'—புறப்பொருள் வெண்பாமாலை, பாடாணபடலம், ரு.

பழிச்சுதல்.:— அரு, அச, அரு.

பாடாண்பாட்டு :—உசு0, உஅரு,உஅச,

